10th September 1960]

*Land for Scheduled Castes*

* 595 Q.—SRI A. VEDARATHNAM: கனம் உள்விவகார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்கு பதிலளிப்பாரா—

(அ) மத்திய சர்க்காரிடமிருந்து பூதான நிலங்களையும், இதர சர்க்கார் புறம்போக்கு தரிசு நிலங்களையும் ஷெட்யூல்டு வகுப்பினருக்குப் பிரித்துக் கொடுப்பது பற்றி ஏதேனும் உத்திரவு வந்திருக்கிறதா?

(ஆ) அப்படியானால், அதன் விவரமென்ன?

(இ) இதுவரை இம்மாநிலத்தில் பூதானமாகக் கிடைத்த நிலம் எவ்வளவு?

(ஈ) அதில் நிலமில்லாதவர்களுக்குக் கொடுத்தது எவ்வளவு?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: (a) to (d) The information is being collected and will be placed on the table of the House as soon as possible.

*Rural Water-supply Works*

* 596 Q.—SRI K. R. VISWANATHAN: Will the Hon. the Minister for Revenue be pleased to state—

(a) the number of Rural Water-supply Works sanctioned during 1959–60 and not yet completed in Udaiyarpalayam taluk, Tiruchirappalli district;

(b) the reasons for the delay; and

(c) the names and the present stage of the works that have not yet been completed?

THE HON. SRI M. A. MANICKAVELU: (a) to (c) A statement [a] is placed on the table of the House.

SRI K. R. VISWANATHAN: இந்த 44 வேலைகளில், இது வரைக்கும் எத்தனை வேலைகள் முடிந்திருக்கின்றன?

THE HON. SRI M. A. MANICKAVELU: இந்த ஜாபிதாவில் வேலைகள் எந்தெந்த கட்டத்தில் இருக்கின்றன என்று குறிப்பிடப் பட்டிருக்கிறது.

SRI M. KULANDAISAMI GOUNDER: ஏர்க்காட்டில் குடி தண்ணீர் திட்டம் ஏதாவது விவகாரத்திற்கு வருமா? அங்குள்ள ஏரி தண்ணீரை குடி தண்ணீருக்குக் கொண்டு வருவதற்கு அவசிய மாக இருப்பதால் அதற்கு சர்க்கார் ஏதாவது உதவி செய்யுமா? 9-00 a.m.

MR. SPEAKER: நீங்கள் கேட்கும் கேள்வி மூல கேள்விக்கு சம்பந்தமில்லை.

SRI K. R. VISWANATHAN: 1959–60-க்காக அனுமதிக்கப் பட்ட வேலைகள் இன்னும் முடிக்கப்படவில்லை என்பதாக தெரிய வருகிறது. 1959–60-ல் அனுமதிக்கப்பட்ட வேலைகளை சர்க்கார்

---

a Printed as Appendix III on pages 670–672 infra.

முடிக்க வேண்டும் என்று சொல்லியும் இன்னும் முடிக்காமல் காலதாமதம் ஏற்படுகிறது. அதைத் தவிர்க்க முன் வருவார்களா?

THE HON. SRI M. A. MANICKAVELU: இதற்கு பல காரணங்களைச் சொல்ல முடியும். அந்தக் காரணங்கள் எல்லாம் கனம் அங்கத்தினருக்கே நன்றாகத் தெரியும். ஏர்க்காட்டில் எவ்வளவு கஷ்டங்கள் தகராறுகள் ஏற்பட்டன என்பதும் அதை ரொம்ப சிரமத்தோடு எடுத்துச் செய்தார்கள் என்பதும் அவருக்கு நன்றாகத் தெரியும். அவருடைய பிராந்தியத்தில் எப்படிப்பட்ட கஷ்டங்கள் ஏற்படுகின்றன என்பது அவருக்கு நன்றாகத் தெரியும்.

*ouse-sites (Harijans).*

*597 Q.—SRI P. G. MANICKAM: கனம் பொது மராமத்து அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்கு பதிலளிப்பாரா—

(அ) ஹரிஜனங்களுக்கு வீடுகள் கட்டிக் கொடுப்பதற்கு பதிலாக வீட்டு மனைக்கட்டு நிலங்கள் வாங்கிக் கொடுப்பதையே அங்கீகரித்து உதவித் தொகை அனுப்பவேண்டுமாய் மத்திய சர்க்காருக்கு நம் மாகாண சர்க்கார் தெரிவித்திருக்கிறார்களா?

(ஆ) அப்படியானால், விவரங்கள் யாவை?

THE HON. SRI P. KAKKAN: (a) Yes, Sir.

(b) The basis for working out the scheme of provision of developed house-sites to Harijans is under examination of the Government. The cost of the scheme has therefore not yet been settled.

*Thiruthuraipoondi Block*

*598 Q.—SRI A. VEDARATHNAM: கனம் உள்விவகார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்கு பதிலளிப்பாரா—

திருத்துறைப்பூண்டி பிளாக்கை இரண்டு பிளாக்குகளாகப் பிரிக்கக் கோரிய அந்த பிளாக்கின் தீர்மானத்தின் மேல் அரசாங்கம் என்ன நடவடிக்கை எடுத்துக் கொண்டிருக்கிறது?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: Sir, the matter is under correspondence with the Government of India.

SRI A. VEDARATHNAM: இன்று இந்த மூன்று ரெவின்யூ பிர்க்காக்கள் அதாவது திருத்துறைப்பூண்டி, ஆலத்தம்பாடி, தலைஞாயர் இவைகள் எல்லாம் சேர்ந்து ஒரே ப்ளாக்காக இருக்கிற காரணத்தால் அங்கே வேலை செய்வது கஷ்டமாக இருக்கிறது. அது அன்-வீல்டி யாக இருக்கிறது. ஆகவே அதை இரண்டு ப்ளாக்குகளாக பிரிக்க சர்க்கார் தீவிரமாக விரைவில் நடவடிக்கை எடுத்துக்கொள்ளுமா?